

உ

சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத் திங்கள் இதழ்

மலர் 13 ] மே 1998 [ இதழ் 11

பெருமைதரு ஆசிரியர் : M. கண்ணப்ப செட்டியார்
(நிருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)



திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனக் குருமுதல்வர்
ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்ததேசிக பரமாசாரிய சுவாமிகள்
குருபூஜைநாள் 17—5—98





1998
மே
மலர் 13
இதழ் 11

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

நமது சிந்தனைக்கு :

*'சித்தம் ஒன்ற வல்லார்க்கு அருளும் அவன்'*

நித்தலும் நியமஞ் செய்துநீர் மலர்தூவிச்
சித்தமொன்ற வல்லார்க்(கு) அருளும் சிவன்கோயில்
மத்தயா னையின்கொ டும்வண்பீ லியும் வாரித்
தத்துநீர்ப் பொன்னி சாகரமேவு சாய்க்காடே.

—திருஞான சம்பந்தர்

தினந்தோறும் விதிப்படி நித்திய கடன்களை முடித்தும், அபிடேகம் செய்தும், மலரால் அருச்சித்தும், மனம் ஒன்றித் தியானம் செய்யவல்ல தொண்டருக்குத் திருவருள் செய்யும் சிவபெருமானது திருக்கோயில், மத யானையின் கொம்புகளையும் அழகிய மயிற்பீலிகளையும் வாரிக் கொண்டு மேடுபள்ளங்களிலே தாவியோடும் நீர்ப் பெருக்குடைய காவிரியாறு ஓடிக் கீழ்க்கடலை அடையுமிடத்து உள்ளதான திருச்சாய்க் காடாகும்.

---

ஒவ்வொரு புனிதமான ஆசையும் கடவுள் பிரார்த்தனையே ஆகும் . — ஹூக்கர்

# புராணங்கள் தரும் படிப்பினை

(தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்)

''அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்''

(திருஞானசம்பந்தப்பெருமானின் திருவருள் வாழ்வின் நுட்பங்களை விளக்கும் இக்கட்டுரை, சமய நீதிகளைக் கதை வடிவில் எடுத்துரைக்கும் நமது புராணங்கள், அரிய பல செய்திகளையுடைய கருவூலங்களாக விளங்குவன என்பதையும், சமய மரபுகள் சமுதாயத்திற்கு வழங்கும் அருட் கொடைகளையும் சிந்தனைக்கு விருந்தாகத் தருகிறது)

**தனிப்பெருந் திருநாள் :**

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்''

சமய உலகம் மகிழ்ச்சியோடு கொண்டாடத்தக்க தனிப் பெருந்திருநாள் இன்றைய 'திருமுலைப்பால்' திருநாள். திருஞான சம்பந்தப்பெருமான் உமையம்மை அளித்த சிவஞானப்பாலை உண்டு உலகம் உய்ய, ''தோடுடைய செவியன்'' என்று அடியெடுத்துத் தேவாரம் பாடத் தொடங்கிச் சிவநெறி விளக்கம் செய்ய முற்பட்ட திருநாள்.

**திருவாதிரைச் சிறப்பு :**

இன்றைய நக்ஷத்திரம் திருவாதிரை, திருஞானசம்பந்தர் திருவவதாரம் செய்ததும் திருவாதிரை. திருமுலைப்பால் உண்டருளிய திருநாளும் திருவாதிரை. இருபத்தேழு நக்ஷத்திரங்களில் திரு என்ற அடைமொழி சேர்த்து வழங்கும் நக்ஷத்திரங்

---

பயப்படுத்துவோனும், பயத்தைப் போக்குவோனும் அவனே
—விஷ்ணு சகஸ்ரநாமம்

கள் இரண்டு; ஒன்று திருவாதிரை. இது சிவபெருமானுக்குரிய திருநக்ஷத்திரம். ''ஆதிரை நாளுகந்தான்'' என்று அப்பரடிகள் குறிப்பிடுகின்றார். பிறிதொரு நக்ஷத்திரம் திருவோணம்; இது திருமாலுக்குரியது. திருவாதிரை அனல் வடிவமாக விளங்கும் நக்ஷத்திரம். திருவோணம் தண்மையுடையதாய் விளங்கும் நக்ஷத்திரம். பொங்கு அழலுருவனாக விளங்கும் சிவபிரானுக்குத் திருவாதிரையையும், தண்ணிய அலைகடலில் துயிலும் திருமாலுக்குத் திருவோணத்தையும் இணைத்துக் கூறுவர். அப்பனும் அம்மையுமாக விளங்கும் இவ்விரு தெய்வங்கட்கு வில்வமும் துளசியும் விருப்பமான பத்திரங்கள். வில்வம் - தங்கச் சத்துள்ளது. துளசி - வெள்ளிச்சத்துள்ளது. இவ்வாறெல்லாம் இந்நாட்டின் இரண்டு பெரிய சமயத்தின் தெய்வங்களும் போற்றப்படுவதைக் காணலாம்.

**அன்புடையவர் யார்?**

ஞானசம்பந்தர் சிவபெருமானுக்குரிய திருவாதிரைத் திருநாளில் அவதரித்ததும், அந்நாளிலேயே திருமுலைப்பால் உண்டு சிவநெறி பரப்ப முற்பட்டதும் திருவருட் செயலாக அமைந்த பொருத்தமாகும். ஞானசம்பந்தர் இலைபடர்ந்த பொய்கையிடத்து அழுதலைக்கண்டு பால் சுரந்தாள் அம்பிகை; ஞானசம்பந்தரைப்பற்றிக் கேள்விப்பட்ட அவ்வமயமே பால் சுரந்தார் மங்கையர்க்கரசியார். அம்பிகையைவிட மங்கையர்க்கரசியார்க்கு ஏற்றம் கூறுவதுபோலச் சிவப்பிரகாச அடிகள் பாடுகிறார்.

''இலைபடர்ந்த பொய்கை இடத்தழுதல் கண்டு
முலைசுரந்த அன்னையோ முன்நின் — நிலைவிளம்பக்
கொங்கை சுரந்தஅருட் கோமகளோ சம்பந்தா!
இங்குயர்ந்தார் யார்சொல் எனக்கு.''

என்பது அப்பாட்டு. குழந்தை அழுதபின் பால் கொடுப்பது இடையன்புடையார் செயலாகும். அழுதற்கு முன்னே பாலளிப்பது தலையன்புடையார் செயலாகும். இதை அடிப்படையாகக் கொண்டு அம்பிகையைக் காட்டிலும் மங்கையர்க்கரசியார் ஞானசம்பந்தரிடம் பேரன்பு காட்டியவர் என்று உபசாரமாகக் கூறு

---

**மணியின் ஓசையைப் போல, கடவுள் உருவமுள்ளவனாயும் உருவமில்லாதவனாயும் இருக்கிறான். — இராமகிருஷ்ணர்**

கிறார் சிவப்பிரகாசர். மங்கையர்க்கரசியாரைச் சிறப்பித்தற் பொருட்டு அவ்வாறு கூறப்பட்டதாகக் கொள்ளவேண்டுமேதவிர உமையம்மையைவிட, அரசியார் உயர்ந்தவர் என்பது பாடற் கருத்தல்ல.

**அழுதபிள்ளை பால் குடிக்கும் :**

'அழுதபிள்ளை பால் குடிக்கும்' என்ற பழமொழி ஞான சம்பந்தர் வரலாற்றைச் சுட்டிக்காட்டும் இந்நாட்டுப் பழமொழி யாக விளங்குகிறது. ஞானசம்பந்தர் சிவஞானப் பாலுண்ட இவ் விழா சீகாழியில் மட்டுமல்ல தலங்கள் தோறும் கொண்டாடும் பொது விழவாகும். ஞானசம்பந்தர் வேத நெறி தழைக்கவும், சைவத்துறை விளக்கம் பெறவும், அழுது அம்மையளித்த ஞானப் பாலுண்டருளிய திருநாள்: உலகம் போற்றுவதற்குரிய உயர்ந்த திருநாள்.

**குழப்பங்கள் தீர :**

ஞானசம்பந்தர், ஞானப்பால் உண்ட இவ்விழாவும் ஏனைய சமய விழாக்களும் நாட்டுமக்கள் நன்னிலையில் வாழத் துணை புரிவனவாகும். நாட்டில் இன்று எழுந்துள்ள பலவகை யான குழப்பங்களும் அகன்று மக்கள் மகிழ்வோடு வாழவேண்டு மானால் கடவுள் துணை வேண்டும்.

தெய்வ நம்பிக்கையும் பக்தி உணர்வு மனிதனை மேலும் மேலும் உயர்த்துவன. அஸ்திவாரமில்லாத கட்டடம் ஊற்றில் லாத கிணறு—மணமில்லாத மலர் சிறப்படைய முடியுமா? அது போலக் கடவுள் உணர்வு இல்லாத வாழ்வு எவ்வாறு சிறப்புறும்? சட்டத்தால் சாதிக்க முடியாததைச் சமயம் சாதிக்கிறது. சமய நெறி மக்களிடையே ஒற்றுமையை வளர்க்கிறது. ஏற்றத்தாழ்வு களை அகற்றுகிறது. புண்ணிய பாவங்கள் என்ற பெயரால், மனிதன் தீய செயல்களை விலக்கி, நல்ல செயல்களை மேற் கொண்டு வாழத் துணைபுரிகிறது. அச்சுறுத்தியும் வற்புறுத் தியும் சட்டம் சாதிப்பதைச் சமயம் எளிமையாகச் சாதிக்கிறது. கடவுள் அருள் இல்லாமல் மனிதன் ஒழுக்கத்தையும் கட்டுப்பாட் டையும் நிலைபெறச் செய்தல் இயலாது. இதை உணர்த்தும் புராண வரலாறுகள் பல.

---

கடவுளைத் தவிர வேறு கடவுள் இல்லை.

—முகம்மதுநபி

**கருவி இன்றியே காரியம் செய்பவன் :**

இறைவன் திரிபுரமெரித்த வரலாற்றில் கூறப்படும் தத்துவத்தை நீங்கள் அறிந்திருக்கலாம். இறைவன் மேருவை வில்லாக வளைத்து வாசுகியைக் கயிறாக பூட்டிப் பூமி தேராக வும், சூரிய சந்திரர்கள் தேர்க்கால்களாகவும் தேவர்கள் தேர்க்கு அங்கங்களாகவும் வரத் தேர்மேல் ஏறிப் புறப்பட்டார் போருக்கு. நாம் இல்லையானால் சிவபிரான் எப்படித் திரிபுரமெரிக்க முடியும் என்று எண்ணிய தேவர்களின் மனக்கருத்து இறைவனுக்குத் தெரிந்தது. குறுநகைபுரிந்தான் இறைவன். தேர் அச்சு முரிந்தது முப்புரங்கள் பொடியாயின; தேவர்கள் ஆணவத்தால் தாங்கள் எண்ணிய எண்ணத்தைத் தவறு என உணர்ந்தனர். பிழை பொறுத் தருளுமாறு இறைவனைப் பணிந்தனர்; இறைவன் அருள் பாலித்தான் என்பது வரலாறு. தேவர் களின் துணையின்றித் தானே எதையும் சாதிக்கவல்லவன் பெரு மான் என்பதை இவ்வரலாறு உணர்த்துகிறது. பிறிதொரு புராண வரலாற்றையும் சுட்டிக்காட்ட விரும்புகிறோம். இக்கால மனிதன் இவ்வரலாற்றில் அமைந்த உண்மையை உணர்ந்து திருந்த வேண்டும். மனிதன், கடமை ஒழுக்கம் கட்டுப்பாடு இவற்றோடு வாழக் கடவுள் துணைவேண்டும் என்பதையும் கடவுள் துணை யின்றி இவ்வுலகில் ஒழுக்க நெறிகளை நிலைபெறுத்தல் இயலாது என்பதையும் இவ்வரலாறு உணர்த்துகிறது.

**கடவுள் துணையின்றி ஒழுக்கம் நிலைபெறாது :**

தாருகாவனத்து முனிவர்கள் 'கடவுள் இல்லை, ஒழுக்கமே வீடு பேறளிக்க வல்லது' என்ற கொள்கைகளையுடையவர்கள், தத்தம் கடமைகளை உணர்ந்து ஒழுக்கத்தோடு, வாழ்வதொன்றே போதுமானது, என்ற எண்ணம் உடையவர்கள். கடவுள் துணையின்றி இவற்றை எவரும் தம் வாழ்வில் கடைபிடித்தல் இயலாது என்பதை விளக்க இறைவன் பிக்ஷாடனராக எழுந்தருளுகின்றான். திருமால் மோகினியாக உடன்வருகிறார். முனிவர்களின் மனைவியர் இறைவனுடைய பேரழகில் மயங்கிக் கற்புநெறி இழந்தனர். மோகினியாக வந்த திருமாலின்வடிவழகில்

---

தூய சிந்தனை பிறக்க, தெய்வ பக்தி வேண்டும்

—உபநிஷதம்

மயங்கி முனிவர் தம் நிறை தளர்ந்தனர். கடவுள் அருள்தான் ஒழுக்கத்தோடு வாழத் துணைபுரிய வேண்டும் என்றஉண்மையைப் பின்னர் உணர்ந்தனர். இறைவனருள் துணையின்றி மனிதன் கடமை ஒழுக்கம் இவற்றைக் கடைபிடித்து வாழ்தல் இயலாது. நாட்டில் ஒழுக்கமும் கட்டுப்பாடும் தெய்வநம்பிக்கையின் அடிப் படையிலேயே அமைவன என்பதை இவ்வரலாறு உணர்த்து கின்றது.

**சமய மரபுகள் :**

புராண வரலாறுகள் போலவே சமய மரபுகளும் சமுதாய நன்மைக்கு அமைக்கப்பெற்றன. ஆட்சி வசதிகட்கு ஏற்ப நாடு பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வேளாண்மை செய்தற்கு வசதியாக வயல்கள் வரப்புகள் அமைக்கப்பெற்றுப் பிரிக்கப்பெற்றுள்ளன. அதுபோல சமுதாய வளர்ச்சிக்கும் நடைமுறைக்கும் சாதிப் பாகுபாடுகள் அமைந்துள்ளன. சமுதாயத்தில் பல்வேறு பிரிவுகளாக இவர்கள் பிரிந்து தங்களுக்குள் வேறுபாடின்றிக் காழ்ப்புணர்ச்சியின்றி முன்னேற்றம் பெற்று உய்ந்தனர். ஆசாரம், சீலம், நாகரிகம், பண்பாடு இவற்றால் மக்கள் இனம் பிரிந்து சமுதாயத்தில் ஒன்றுபட்டு வாழ்ந்தனர். மேல்நிலையில் உள்ளவர்களுக்கு – சிவஞானியர் களுக்குச் சாதிவேற்றுமை இல்லை. மொழி-நாட்டு வேற்றுமைகள் இல்லை; யாதும் ஊரே யாவரும் கேளிர் (சுற்றத்தார்) என்ற கொள்கை உடையவர்கள் அவர்கள். ஞானசம்பந்தர் பாடும் பாடல்களுக்குத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் அருகில் இருந்து யாழ்வாசிக்கும் பணியைச் செய்துவந்தார். 'அந்தணரில் மேம் பட்ட அப்பூதி அடிகள் வேளாண் குலத்திலவதரித்த அப்பரடி களைத் தெய்வமாகப் போற்றினார்' என்பதைப் பெரியபுராணம் கூறுகிறது. உலகியல் நிலையில் இப்பிரிவுகள் சமுதாய அமைப்பு வளர்ச்சிக்கு ஏற்படுத்தப்பட்டன. ஆனால் இன்று அப் பிரிவுகள் அமைக்கப் பெற்ற நோக்கம் மாறிவிட்டது, உயர்வு தாழ்வு வேற்றுமைகள் உருவாகிவிட்டன. காழ்ப்புணர்வு மக்களிடையே தோன்றி உண்மையை மறைத்துவிட்டது. இந் நிலைமாறி வேற்றுமையில் ஒற்றுமை கண்டு உயரவேண்டும்.

---

செல்வமும் மக்களும் தெய்வத்தை மறக்கசெய்து விடாத படி காத்துக் கொள்.

—முகமதுநபி

**சீகாழி நினைவு :**

ஞானசம்பந்தர் வரலாற்றில் பொதுநிலையில் இவ்வாறு தோன்றும் கருத்துக்களோடு சிறப்பு நிலையில் நாம் அறிய வேண்டிய சிலவற்றையும் கூற விரும்புகிறோம். ஞானசம்பந்தர் தலங்கள் தோறும் சென்றும் இறைவனைத் தரிசித்துப் பதிகம் பாடியுள்ளார். எங்குச் சென்றாலும் தம்மை ஆட்கொண்டருளிய சீகாழிப் பெருமானின் நினைவு அவர் நெஞ்சத்தில் நீங்காமல் நிலைபெற்றிருப்பதைக் காண்கிறோம்.

திருவீழிமிழலையில் ஞானசம்பந்தர் தங்கியிருக்கும் காலத்தில் சீகாழி அந்தணர்கள் பலரும் சென்று 'காழிப்பெருமானைப் பிரிந்து பலநாட்கள் ஆயினவே; சீகாழிக்கு எழுந்தருளுங்கள்' என வேண்டினர். சம்பந்தரும் புறப்பட எண்ணியிருந்தார். அன்றிரவு ஞானசம்பந்தர் கனவில் பெருமான் தோன்றி காழிக் காட்சியை வீழிமிழலையில் காட்டுவதாகக்கூறி மறைந்தார். பிள்ளையார் விழித்தெழுந்து திருக்கோயிலுக்குச் செல்கின்றார். சீகாழிக் காட்சியைப் பெருமான தோணியப்பராக ஞானசம்பந்தருக்குக் காட்டுகிறார். இருதலங்களையும் இணைத்துத்திருப் பதிகம் பாடுகிறார் ஞானசம்பந்தர். எல்லாத் தலங்களிலும் எழுந்தருளியுள்ள இறைவன் ஒருவனே என்பதை ஞான்சம்பந்தர் வாயிலாக இறைவன் நமக்கு உணர்த்துகின்றார்.

**நன்றி உணர்வு :**

மதுரையில் ஞானசம்பந்தர் சமணர்களோடு நிகழ்த்திய அனல்வாதத்தில் திருமுறையில் கயிறு சாத்திப் பார்த்தபோது கிடைத்த பாடல் திருநள்ளாற்றுத் தேவாரப்பாடலாகிய 'போகமார்த்த பூண்முலையாள்' என்ற பாடலாகும். மதுரையில் சைவ நெறி பரப்பி மீண்ட ஞானசம்பந்தர் திருநள்ளாறு சென்று நன்றியோடு பெருமானை வணங்கிப் பாடுகிறார். மதுரை திருநள்ளாறு இருதலங்களையும் இணைத்துப் பதிகம் பாடுகிறார். 'பாடகமெல்லடி'' என்று தொடங்கும் இப்பதிகப் பாடலில்

''சூடகமுன்கை மடந்தைமார்கள் துணைவரோடும்
தொழுது ஏத்திவாழ்த்த
ஆடகமாடம் நெருங்குகூடல் ஆலவாயின்கண்
அமர்ந்த வாறே''

---

உண்மையான பக்தன் யார் என்று கடவுளுக்குத் தெரியும்
—பிரான்ஸ்

என்ற தொடரால் மதுரை மகளிர் தம் தம் துணைவரொடும் சென்றும் வழிபடுகிறார்கள் என்று கூறுமுகத்தால் திருக்கோயிலுக்குக் கணவனும் மனைவியும் இணைந்து சென்று வழிபட வேண்டுமென்ற குறிப்பையும் புலப்படுத்துகிறார் ஞானசம்பந்தர். அவர் தம் அருளிப்பாட்டின் திறத்தால் இன்றும் மதுரையில் மகளிர் தத்தம் துணைவரோடு சென்று வழிபடும் காட்சியைக் காணலாம்.

**செந்தண்மை :**

ஞானசம்பந்தர் வரலாற்றில் சமணர்களைக் கழுவேற்றியது பற்றிய ஆராய்ச்சி இன்னும் நடந்து கொண்டுதானிருக்கிறது. சமணர்கள் தாங்களே தேடிக்கொண்ட இம்முடிவுக்கு ஞானசம்பந்தரைப் பொறுப்பாக்குதல் கூடாது. அவரோடு வாதம் செய்ய முற்பட்டவர்களே சமணர்கள்தான். ஞானசம்பந்தர் இறைவன் திருவுள்ளக் குறிப்பினைக் கேட்டறிந்த பிறகே வாதத்திற்கு இசைகின்றார். வாதத்தைத் தொடங்கிய சமணர்கள் தாங்களே, 'தோற்றால் கழுவேறுவோம்' என்று ஒருமுடிவை வகுத்துக்கொண்டார்கள். முடிவில் தோல்வி அடைந்த அவர்களைப் பாண்டிய மன்னன் கழுவேற்றுகின்றான்: செந்தண்மை பூண்ட அந்தணராகிய ஞானசம்பந்தர் இச் செயலைக் கண்டு மறுகுகிறார். வெற்றிபெற்றுச்சைவப்பெருமையை நிலை நாட்டிய ஞானசம்பந்தர் பின்பு திருக்கோயிலுக்குச் சென்று பாடிய 'வீடலால வாயிலாய்' என்ற பதிகத்தில்,

> ''குற்றம்நீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்
> சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
> கற்றநூற் கருத்தும்நீ அருத்தம்இன்பம் என்றிவை
> முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பதென் முகமனே''

என்ற பாடலில் அவர் மனநிலை நன்கு புலனாகிறது.

**நினைவும் செயலும் :**

வாதில் தோற்ற சமணர்கள் அதனால் அடையும் இன்னலுக்காக ஞானசம்பந்தர் மறுகிய செயலே அவர்களை அவ்வின்னலினின்றும் மீட்டதாகின்றது. ஏனெனில் நல்லதாயினும் தீயதாயினும் அதனை மனத்தால் நினைதலே செய்வதற்கு

---

**தேவைகள் குறையும் அளவுக்குத் தெய்வத் தன்மையை அடைவோம்.** —சாக்ரடீஸ்

ஒப்பாகும். 'நினைத்தலும் செய்தலோடு ஒக்கும்' என்று விளக்குவார் திருக்குறளுக்கு உரை வகுத்த பரிமேலழகர். குத்தாலத்து இறைவன் பெயராகிய 'சொன்னவாறு அறிவார்' என்பதில் 'அறிவார்' என்பதற்கும் 'செய்வார்—செய்தார்' என்பதுதான் பொருள்.

''கேளுங்கள் கொடுக்கப்படும்'' என்று ஒரு தொடர் பிற சமயங்களில் கூறப்படும். நம்சமயத்திற்கும் அது பொதுவானது தான். பெரியோர் சொல்லும் அறிவுரைகளைக் கேளுங்கள்; இதில் உங்கட்கு நன்மை கிடைக்கும் என்பது அதன்பொருள். 'கேட்டல் என்பதற்குக் கேட்டு அதன்படி நடத்தல் என்பதே பொருளாகும். நினைத்தலும் செய்தலேயாதலால் 'தீய காரியத்தை மனத்தால் நினைத்தலும் கூடாது' என்பது விளங்கும். சிறியு குற்றம்தானே? இன்று மட்டும் இதைச் செய்தாலென்ன என்று நினைத்து செய்யப்புகும் மனிதன் பெரிய குற்றங்களுக்கு இரையாகிவிடுவான். இதை உணர்த்தும் கதை ஒன்று உண்டு. மனிதனின் மனோதத்துவத்தை இது விளக்குவது.

**மனோதத்துவம் :**

அரசன் ஒருவன் பொற்கிழி ஒன்றை நான்கு வாயில்கள் உள்ள ஒரு மண்டபத்தின் நடுவில்கட்டி, ''மது வருந்துதல், விதவையை மணத்தல், புலாலுண்டல், பசுக்கொலை புரிதல்ஆகிய குற்றங்களை வாயில்கள்தோறும் வகுத்து இக்குற்றங்களில் ஒன்றை வேதாகமசிலர் செய்து இப்பொற்கிழியைப் பெறலாம்'' என்று பறை அறைவித்தான், வேதாகமங்கள் அறிந்த ஏழை அந்தணன் ஒருவனுக்கு அதைப்பெற வேண்டுமென்று ஆசை உண்டாயிற்று. 'நான்கு குற்றங்களில் சிறுகுற்றம்தானே இது' என்று தீர்மானித்து மதுவருந்தத் தொடங்கி முடிவில் அறிவு திரிந்து ஏனைய மூன்று குற்றங்களையும் செய்து பெருங்குற்றவாளியானான் என்று கூறுவார்கள். சிறிய தவறுகள் பெரிய தவறுகளைச் செய்வதற்குத் தூண்டுகின்றன. மனிதன் எந்த ஒரு தவறுக்கும் மனதில் இடம் கொடுக்கக்கூடாது. ஒழுக்கம் மனஉறுதி இவற்றைப் பெறுதற்கு இதுபோன்ற விழாக்களில் ஈடுபட்டு மக்கள் கடவுளை வழிபாடு செய்யவேண்டும்.

—நன்றி 'திருவருட் செய்தி'

---

**ஆண்டவன் இலன் எனினும் அறநெறி நிற்போம் என்பவரே அவன் அடியவராவர் —பிரௌனிங்**

தலவரலாறு

## திருமழபாடி

சோழவளநாட்டில் காவிரியின் வடகரையில் விளங்கும் பாடல் பெற்ற தலங்களில் 54-வது தலம் திருமழபாடி. திருச்சிராப் பள்ளி மாவட்டத்தில் அரியலூர் வட்டத்தில் கொள்ளிடத்தின் வடகரையில் இத்தலம் விளங்குகிறது. திருவையாற்றிற்கு வட மேற்கே சுமார் 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. திருவை யாற்றிலிருந்து வைத்திய நாதம்பேட்டைக்கு நகரப்பேருந்தில் சென்று அங்கிருந்து கொள்ளிடநதியைப் பரிசில்மூலம் கடந்து இத்தலத்தை அடையலாம். அரியலூர் திருவையாறு ஆகிய ஊர் களிலிருந்து பேருந்துகளின் மூலமும் இத்தலத்தை அடையலாம். திருச்சிராப்பள்ளி விழுப்புரம் [இரயில்மார்க்கத்தில் புள்ளம்பாடி இரயில் நிலையத்திலிருந்து 15 கிலோ மீட்டர் தூரத்தில் இத் தலம் உள்ளது.

**மழவர்பாடி :**

முற்காலத்தில் வெள்ளாற்றிற்கும் வடகாவிரிக்கும் இடை யில் உள்ள பகுதி மழநாடு என்றும் வடகரை மழபாடி நாடு என்றும் அந்நாட்டில் உள்ளவர்கள் மழநாட்டார் என்றும் வழங் கப்பட்டு வந்ததாக நூல்கள் தெரிவிக்கின்றன. அரியலூர் மன்னர் கள் மழவராயர் என அழைக்கப்படுகின்றனர். மழவர்கள் சேரர் கிளையினராவர்.

கொல்லி மழவன் என்ற அரசன் முற்காலத்தில் இப்பகு தியை அரசு புரிந்துள்ளான். பாடி - படைகள் தங்குமிடமாகும். மழவர்களின் சேனைகள் தங்கிய இடமாதல் பற்றி ,இத்தலம் மழவர்பாடி என வழங்கப்பெற்றுப் பின் மழபாடி என மருவிய தாகலாம், தேவர்ரத்தில் மழபாடி என்றே குறிக்கப்படுகிறது.

பனைமரங்களை மிகுதியாகக்கொண்டிருந்ததால் தால வனம் எனவும் மார்க்கண்டேய முனிவர் பொருட்டு இறைவன் மழுவேந்தியாடி அருட்காட்சி வழங்கியகாரணத்தினால் மழுவாடி என்றும் பெயர் வழ்ங்கலாயிற்று எனத்தலபுராணம் தெரிவிக்

---

**உயர்ந்தவனிடம் உண்டாகும் பக்தியிலும் உயர்ந்த உணர்ச்சி கிடையாது. —கார்லைல்**

கிறது. ''மருமலர் மழைகள் தூவிவானவர் வணங்கி ஏத்தக், கருமழை யனைய கூந்தல் கவுரி கண்டு இனிதுபோற்றப், பொரு மழு அங்கை ஏந்திப் புனிதன் நின்றாடலாலே, பெருமழு வாடி யென்னும் பெயர் பெறும் அந்த மூதூர்'' என்பது தலபுராணம்.

**கோயிலமைப்பு :**

கொள்ளிடப்பேராற்றின் கவின்மிகுவடகரையில் கிழக்கு நோக்கி இத்திருக்கோயில் விளங்குகின்றது. இத்தலத்தில் கொள் ளிடம் உத்திரவாகினியாக - வடக்கு நோக்கிச் செல்கிறது. ஏழு நிலைகளோடு கூடிய இராஜகோபுரத்துடனும் மூன்று பிராகாரங் களுடனும் திருக்கோயில் பெருங்கோயிலாகக் காட்சி யளிக்கிறது இராஜகோபுரத்தை அடுத்து உள்ளே சென்றதும் கொடிமரம் நந்தி பலிபீடங்கள் விளங்குகின்றன, இரண்டாவது கோபுர நிலை வாயிலைக் கடந்தவுடன் மிகப்பெரிய அலங்கார மண்டபம் காட்சி தருகிறது. இம்மண்டபத்தில் அடுத்தடுத்து இரண்டு நந்திகள் சந்நிதியில் உள்ளனர். மண்டபத்தின் தென்பகுதியில் கோயிலின் முதற்பிராகாரத்தின் தென்புறத்தில் அகோர வீரபத்திரர் விநாய கர் முருகன் கோயில்கள் உள்ளன.

மூன்றாவது கட்டைக் கோபுர வாயிலைக் கடந்தவுடன் விநாயகர் காட்சி தருகிறார். மிகப்பெரியதாகவும் அழகிய தாகவும் அமைந்துள்ள மகாமண்டபம் சித்சபை மண்டபமாகக் காட்சிதருகிறது. மண்டபத்தின் தென்பால் சப்தமாதாக்கள் விளங்குகின்றனர். மூன்று புறங்களிலும் திருமாளிகைப் பத்தி யோடு கூடிய மண்டபம் திகழ்கிறது. அழகிய உட்பிராகாரம். தென்பகுதியில் தலத்திருப்பதிகக் கல்வெட்டுக்கள் அமைக்கப் பட்டுள்ளன. மேற்குப்பிராகாரத்தில் கன்னி மூலையில் தல விநாயகர் காட்சி தருகிறார். இத்தலத்தின் தனிச் சிறப்பிற்குரிய மூர்த்தியாக விளங்கும் ஒரே கல்லிலமைந்த பெரிய சோமாஸ்கந்த மூர்த்தியை வழிபடலாம். முருகன் திருமால் மகாலக்ஷ்மி திரு வுருவங்களும் உள்ளன. அடுத்து, பரவையாருடன் சுந்தரர் எழுந்தருளி விளங்குகிறார். தலமரம் - பனை இங்குள்ளது. வட பால் சொக்கநாதர் மீனாட்சி கோயில் உள்ளது. இத்தலபுரா ணத் தொடர்பான முனிவர்கள் பலர் திருவுருவங்கள் உள்ளன. வடக்குப்பிராகாரத்தில் துர்க்கைகோயிலும் ஜுரகரேசுவரர்

---

நற்குணங்களையே நான் ஞானம் என்று சொல்லுவேன்
—சாக்ரடீஸ்

கோயிலும் உள்ளன. அடுத்து சண்டேசுவரர்கோயில் உள்ளது. வழிபட்டுக்கொண்டே மகாமண்டபத்தின் வடபகுதியை அடைகிறோம் காலசம்கார மூர்த்தி கோயிலும் அருள்மிகு பாலாம்பாள் கோயிலும் அதையடுத்து நடராஜப் பெருமான் எழுந்தருளியுள்ள சித்சபையும் உள்ளன.

கர்ப்பக்கிருக விமானமும் சோமாஸ்கந்தர் கோயிலுமாக இணைந்து இருபெருங் கோயிலாக உள்ளது. மிகப்பெரிய சோமாஸ்கந்தர் மண்டபத்தில் விநாயகர் தெற்கு நோக்கி உள்ளார். அனைத்து உற்சவ விக்கிரங்களும் இங்கு வைக்கப்பெற்றுள்ளன. வடபால் [சுவாமிகோயிலின் அர்த்த மண்டபத்தை அடைகிறோம். சுவாமி சந்நிதி மிக்க விளக்கத்தோடு திகழ்கிறது. அருள்மிகு வைத்திய நாதரை வழிபட்ட மனநிறைவோடு நிற்கிறோம்.

சுவாமி கோயிலின் இடதுபாகத்தில் அம்பாள் கோயில் உள்ளது அம்பாள் சந்நிதியும் கிழக்கு நோக்கி உள்ளது. இரண்டு பிராகாரங்கள். இது தனிக்கோயிலாக உள்ளது. சந்நிதியில் இலக்குமி தீர்த்தம் உள்ளது. அழகிய முன் மண்டபத்தோடு அழகுற விளங்குகிறது. சந்நிதியில் நம்மனம் அன்னையின் அடிமலர்களில் குவிகிறது. வழிபட்டுக்கொண்டு வெளியேவருகிறோம்.

**மூர்த்திகள் :**

இத்தலத்தில் விளங்கும் பெருமானுக்கு ஸ்ரீ வைத்தியநாதர், ஸ்ரீ வச்சிரத்தம்பேசுவரர், அருள்மிகு வைரத்தூண்நாதர், மழுவாடீசர் என்னும் பெயர்கள் வழங்குகின்றன. இத்தலத்தில் அம்பிகை கோயில்கள் இரண்டு உள்ளன. அருள்மிகு. பாலாம்பிகை, சுவாமி கோயிலில் நடராஜர் சந்நிதிக்கு அருகில் தெற்கு நோக்கி விளங்குகிறார். பிரதான அம்பாள் கோயில் சுவாமி கோயிலுக்கு வடபால் கிழக்கு நோக்கி உள்ளது. அம்பிகை பெயர் அருள்மிகு அழகம்மை. வடமொழியில் சுந்தராம்பிகை: விநாயகர் சுந்தரவிநாயகராவார்.

சந்திரனுக்குள்ள கய நோயைப் போக்கியதால் இறைவர் வைத்தியநாதர் எனப் பெறுகிறார். மழபாடி மருந்தீசர் எனத்

---

**ஐம்பூதங்களும் எப்படி உண்மையானவையோ, அப்படி ஆன்மாவும் உண்மையானது — யஞ்ஞவல்கியர்**

தேவாரப் பாடல் இப்பெயரைக் குறிப்பிடுகிறது. புருஷாமிருக முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பெற்ற சிவலிங்கத்தைப் பிரமன் பெயர்த்தெடுக்க முயன்ற போது வச்சிரத்தம்பமாக இறைவன் விளங்கிய காரணத்தால் வச்சிரத்தம்பேசுவரர் என வழங்கப்படுகிறார். திருநாவுக்கரசு சுவாமிகள் மழபாடி வைரத்தூணே எனப்போற்றுவதை அவர்தம் தேவாரத் திருப்பதிகத்துட் காணலாம். சேக்கிழார் ''மழபாடி வயிரமணித்தூண் அமர்ந்து மகிழ் கோயில்'' எனக் கூறலையும் காணலாம். மழபாடியுள் மாணிக்கம்' எனச் சுந்தரர் போற்றுகிறார்.

இத்தலத்தில் ஒரே கல்லிலமைந்த சோமாஸ்கந்தர் திருவுருவம் காணத்தக்கது.

தீர்த்தம் - இலக்குமி தீர்த்தம். அம்பாள் சந்நிதிக்கு எதிரில் உள்ளது. திருமகளுக்கு ஒரு முனிவர் சாபத்தினால் ஏற்பட்ட சரும நோயை நீக்கியதால் இத்தீர்த்தம் இலக்குமியின் பெயரால் விளங்குகிறது. சிவகங்கை கொள்ளிட நதியுடன் கலந்துவிட்டது. கொள்ளிடம்-இத்தலத்தில் உத்திரவாகினியாகச் செல்கிறது. தலமரம் - பனை.

**தலப்பெருமைகள் :**

இந்திரன் திருமால் முதலியோர் வழிபட்ட சிறப்புடையது. மார்க்கண்டேய முனிவருக்கு வைகாசி விசாகநாளில் சிவபெருமான் மழுவேந்திக்காட்சி கொடுத்தாடியது. இலக்குமி சந்திரன் இவர்களுக்கு ஏற்பட்ட நோய் நீங்க அருள்செய்தது. நந்திகேஸ்வரருக்கும் சுயசாம்பிகைக்கும் திருமணம் நிகழ்ந்த தலம். இத்திருமண ஐதிக நிகழ்ச்சி ஆண்டுதோறும் பங்குனி மாதம் புனர்பூச நாளில் பெருவிழாவாக இத்தலத்தில் நிகழ்ந்து வருகிறது. அன்றைக்கு ஐயாறப்பரும் இத்தலத்திற்கு எழுந்தருளிவந்து காட்சி கொடுப்பார். இத்திருமண விழாவின் 27 ஆம் நாள் திருவையாற்றில் நிகழும் சப்தஸ்தான விழாவிற்கு நந்திகேசுவரரும் எழுந்தருளிச் சென்று அருட்காட்சி நல்குவர்.

**வைரத்தூண் நாதர் :**

மூலலிங்கம் புருஷாமிருக முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பெற்றது. முனிவர் தேசுபரவும் ஒரு சிவலிங்கத்தைத் தேடிப்

---

உலகத்திலுள்ள எல்லாச் சக்திகளையும் விட ஆன்ம சக்தியே அதிகப் பலமுள்ளதாகும். — காந்தியடிகள்

பிரதிஷ்டை செய்ய விரும்பினார். பிரமன் உலகத்தில் அத்தகைய சிவலிங்கம் இருப்பதறிந்து வேண்டினார். பிரமன் தர மறுத்தான். முனிவர் தவம் செய்தார். அத்தவத்திற்கிரங்கிய பெருமான் பிரமனுலகத்திலிருந்து மண்ணுலகிற்கு வந்து பூமியைப் பிளந்து வயிரத்தூணாக எழுந்தருளினார். மிருகர் மகிழ்ந்தார். பிரமன் சிவலிங்கத்தைக் காணாது பூமிக்குவந்து மிருகரோடு பூசலிட்டு சிவலிங்கத்தைப் பெயர்க்க முற்பட்டான். பெருமான், சிவலிங்கத்திலிருந்து வெளிப்பட்டு முனிவரின் தவத்திற்கிரங்கித் தாமே இங்கு வந்ததாகவும் பிரமனை இங்கு வந்து வழிபடுமாறும் கூறி மறைந்தருளினார்.

**வைத்தியநாதர் :**

சந்திரன் தன் மனைவியர் இருபத்தெழுவரில் உரோகிணியிடம் மிக்க நேசம் கொண்டொழுகினான், எஞ்சியோர் தங்கள் தந்தையாகிய தக்கனிடம் முறையிட்டனர். தக்கன் சந்திரனைக் க்ஷயரோகத்தால் வருந்திக் கலை களை இழக்கும்படிச் சபித்தான். சாபம் பெற்ற சந்திரன் இத்தலத்திற்கு வந்து பெருமானை வழிபட்டு நோய் நீங்கப் பெற்றான். பெருமான் சந்திரனைத் திருமுடியில் ஏற்று அருள் வழங்கினார். சந்திரனுடைய நோயை நீக்கியதால் வைத்திய நாதர் என வழங்கப்பெற்றார்.

**மழுவாடீசர் :**

பதஞ்சலி வியாக்கிரபாதரைப் போல மார்க்கண்டேய முனிவரும் இறைவனது திருநடனத்தைக் காண விழைந்து தவம் செய்தார். பெருமான் இவரது தவத்திற்கு இரங்கி வைகாசி விசாகத் திருநாளில் மழுவேந்தி நடம் புரிந்தருளினார். ஆதலின் பெருமான் மழுவாடீசர் எனப்பெற்றார். 'கையில் ஏந்திய மழுவினான் உறையும் மழபாடி' என ஞானசம்பந்தர் மழுவேந்திய மழுவாடீசரைக் குறித்தருளுகின்றார்.

**நந்திதேவர் திருமணம் :**

மகப்பேறின்றி வருந்திய சிலாதமுனிவர் இறைவனை வழிபட்டார். ''அப்போது ஐயாறப்பர், 'நீ புத்திரகாமேட்டியாகம் செய்து பூமியை உழுதால் பெட்டகம் தோன்றும். அதில் புத்திரன் காணப்படுவான். அவனுக்கு வயது பதினாறு'' என்றும்

---

**உழைப்பை மட்டும் விற்கலாம் ,ஒருநாளும் ஆன்மாவை விற்கலாகாது.**

—ரஸ்கின்

அருளினார். யாக முடிவில் பூமியை உழுங்கால் ஒரு பெட்டகம் அகப்பட்டது. அதைத் திறந்து பார்த்தபோது நான்குதோளும் மூன்றுகண்ணும் உடைய ஒரு சிவமூர்த்தி காணப்பட்டார். 'பெட்டியை மூடித்திற' என்ற அசரீரிப்படி பெட்டியை மூடித்திறந்த போது அழகிய குழந்தை வடிவம் தோன்றியது. முனிவர் அக்குழந்தைக்குச் செப்பேசன் எனப் பெயர் சூட்டி அன்போடு வளர்த்தார். பதினான்கு வயதில் செப்பேசன் கலை ஞானங்கள் நிரம்பப் பெற்றார். இன்னும் இரண்டு ஆண்டுகளில் செப்பேசரை இழக்க நேருமே என்று முனிவரும் அவர் துணை வியாரும் வருந்தினர். அதனை அறிந்த செப்பேசர் ஐயாறப்பர் ஆலயமடைந்து அயனரி தீர்த்தத்தில் காலை ஊன்றிக்கடுந்தவம் புரிந்தார். பலநாட்களாயின. அவரது காலை மீன்களும் பாம்பும் அரித்துத்தின்றன. இறைவன் காட்சியளித்து வேண்டும் வரங் களை நல்கினார்.

இறைவன் செப்பேசரது எற்புடம்பை நலமுறச்செய்வித் தற் பொருட்டு கங்கை நீர் முதலிய ஐவகைத் தீர்த்தங்களினால் அபிடேகம் செய்தார். செப்பேசர் உடல் ஊறு நீங்கினார். ஒளிமயமாகத் திகழ்ந்தார்.

சிலாத முனிவர் திருமழ்பாடியில் தவம் செய்து வதிந்த வசிஷ்ட முனிவரின் பேத்தியும் வியாக்ரபாதருடைய மகனும் உபமன்யு முனிவரின் தங்கையுமான சுயசாதேவியைத் தம்புதல் வருக்குப் பங்குனிமாதப் புனர்பூச நக்ஷத்திரத்தன்று திருமணம் செய்வித்தார். பின் செப்பேசர் திருக்கயிலையில் சிவகணங்களின் தலைவராம் நிலையையும், முதல் திருவாயிலில் நின்று காக்கும் உரிமையையும், முதல் குருவாம் தன்மையையும் பெற்றார். சிலா தமுனிவரின் புதல்வராய்த் தோன்றியவர் திருநந்திதேவராவார். இவரதுதிருமணவிழா திருமழபாடியில் ஆண்டுதோறும் நிகழ்கிறது ஐயாறப்பரும் இவ்விழாவிற்கு எழுந்தருளிச் சிறப்பிப்பர்.

இக்கோயிலில் நவக்கிரகங்கள் இல்லை. அதற்குப் பதிலா கச் சுவாமி சந்நிதியில் மூன்று குழிகள் உள்ளன. சிபிச்சக்கிர வர்த்திக்கு நவக்கிரக தோஷம் போக்கிய தலம்.

---

**சேராததை முடித்து வைப்பது எதுவோ, அதுதான் மாயை**

—வடமொழி சுலோகம்

**இலக்கியம் :**

இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகம் மூன்றும், திருநாவுக்கரசு சுவாமிகள் திருத்தாண்டகப்பதிகங்கள் இரண்டும், சுந்தரர் அருளிய பதிகம் ஒன்றும் ஆக ஆறு திருப்பதிகங்கள் உள்ளன.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாலம் பொழிலில் இறைவனை வணங்கித் தங்கியிருந்த காலத்தில் இறைவன் அவர் கனவில் தோன்றி ''மழபாடிக்கு வர மறந்தனையோ'' என்று கூறி நினைப்பிக்க எழுந்த சுந்தரர் திருமழபாடிக்கு எழுந்தருளி புகழ் பெற்ற பதிகமாகிய ''பொன்னார் மேனியனே'' என்ற திருப்பதிகத்தை அருளிச்செய்து வழிபட்டார். பாடல்கள்தோறும் ''மழபாடியுள் மாணிக்கமே உன்னையல்லால் இனியாரை நினைக்கேன்'' என அருளிச்செய்துள்ளார்.

இத்தலத்திற்கு தருமையாதீன ஆதி பரமாசாரியர் ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகளின் ஞானாசாரியராகிய ஸ்ரீ கமலை ஞானப்பிரகாச தேசிகர் அவர்களால் இயற்றப்பட்ட தலபுராணம் ஒன்று உள்ளது. இயற்றியகாலம் சகம் 1487 ஆகும். அச்சாகியுள்ளது.

# பதிகப் பெருவழி—54

## திருமழபாடி

### சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது

திருப்பதிக வரலாறு

சுந்தரர் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருவாலம் பொழிலில் பெருமானை வணங்கித் தங்கியிருந்து இரவு துயில் கொள்ளும்பொழுது, பெருமான் கனவில் தோன்றி, ''மழபாடியினில் வருவதற்கு நினைக்க மறந்தாயோ?'' என்று அருள, துயில் எழுந்து, திருமழபாடி அடைந்து தொழுது பாடியருளியது இத்திருப்பதிகம். (ஏயர்கோன் – புராணம். 71-74,)

பொன்னார் மேனியனே புலித் தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 1

மழபாடியில் மாணிக்கம் போலத் திகழும் இறைவனே, பொன் மேனியனே, புலித்தோலுடுத்தவனே, கொன்றை அணிந்தவனே. உன்னை நினையாது யாரை நினைப்பேன்

கீளார் கோவணமுந் திரு நீறுமெய் பூசியுன்றன்
தாளே வந்தடைந்தேன் தலை வா எனை ஏன்றுகொள் நீ
வாளார் கண்ணிபங்கா மழ பாடியுள் மாணிக்கமே
கேளா நின்னையல்லால் இனியாரை நினைக்கேனே. 2

கோவண முடுத்துத் திருநீறு பூசி விளங்குபவனே! உமை பங்கனே, உனது திருவடியைச் சரணாக வந்தடைந்தேன். என்னை ஏற்றுக்கொள். உன்னை யல்லாது வேறு யாரை உறவாக நினைப்பேன்.

எம்மான் எம்மனையென் றனக் கெட்டனைச் சார்வாகார்
இம்மா யப்பிறவி பிறந் தே இறந் தெய்த்தொழிந்தேன்
மைம்மாம் பூம்பொழில்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
அம்மான் நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 3

என் தந்தையும் தாயும் எனக்கு எள்ளளவும் சார்வாகார். இப்பிறவியை எடுத்துப் பிறந்து இளைத்தேன்; மழபாடியுள் மாணிக்கமே உன்னையல்லால் வேறு யாரை நினைப்பேன்.

பண்டே நின்னடியேன் அடி யாரடி யார்கட்கெல்லாம்
தொண்டே பூண்டொழிந்தேன் தொட ராமைத்
(துரிசறுத்தேன்

---

உலகத்தில் மனிதன் ஆசைப்படக்கூடியது ஒன்று உளது அதுவே அறம் —ஜராதுஷ்டிரர்

வண்டார் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
அண்டா நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 4

உன் அடியவனாகிய நான் உன் அடியார் அடியார்கட்குத் தொண்டு பூண்டுவிட்டேன். குற்றம் களைந்தேன். வானுலகில் வாழ்வோனே, உன்னையன்றி யான் யாரை நினைப்பேன்.

கண்ணாய் ஏழுலகுங் கருத்தாய அருத்தமுமாய்ப்
பண்ணார் இன்தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே
மண்ணார் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
அண்ணா நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே 5

ஏழுலகங்களிலும் வாழும் உயிர்கட்கு அறிவாகியும் அவை விரும்பப்படும் பொருளாகியும் இனிய தமிழ்ப்பாடல்களாகியும் மேலான ஒளியாகவும் விளங்குவோனே- தலைவனே உன்னையன்றி யாரை நினைப்பேன்.

நாளார் வந்தணுகி நலி யாமுனம் நின்றனக்கே
ஆளா வந்தடைந்தேன் அடியேனையும் ஏன்றுகொள்நீ
மாளா நாளருளும் மழபாடியுள் மாணிக்கமே
ஆளாய் நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 6

இறுதிநாள் வந்து துன்புறுத்துவதற்கு முன் உனக்கு நான் ஆளாதற் பொருட்டு உன்னை அடைந்தேன். என்னை ஏன்றருள். அடியவர்க்கு முடிவில்லாத வாழ்நாள் அருளும் மழபாடி இறைவனே, உன்னையன்றி யாரை நினைப்பேன்.

சந்தா ருங்குழையாய் சடை மேற்பிறை தாங்கிநல்ல
வெந்தார் வெண்பொடியாய் விடையேறிய வித்தகனே
மைந்தார் சோலைகள்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
எந்தாய் நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 7

குழையணிந்தவனே, சடைமேற் பிறை தரித்தவனே, திருநீற்றை அணிந்தவனே, விடையேறிவரும் வித்தகனே, மழபாடியில் திகழும் மாணிக்கம்போல்பவனே, என் தந்தையே, உன்னையன்றி யாரை நினைப்பேன்.

---

அறிவு குறைவாயினும் அறநெறியில் நிற்க முடியும்
— ஷிண்டோ

வெய்ய விரிசுடரோன் மிகு தேவர்க ணங்களெல்லாம்
செய்ய மலர்களிட மிகு செம்மையுள் நின்றவனே
மையார் பூம்பொழில்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
ஐயா நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 8

சூரியன் முதலிய தேவர் கணங்கள் மலர் தூவி வழிபட, அவர்கட்கு நேர்நின்று அருள்புரிபவனே, மழபாடி மாணிக்கமே; ஐயா உன்னையன்றி இனியாரை நினைப்பேன்.

நெறியே நின்மலனே நெடு மாலயன் போற்றிசெய்யும்
குறியே நீர்மையனே கொடி யேரிடை யாள்தலைவா
மறிசேர் அங்கையனே மழ பாடியுள் மாணிக்கமே
அறிவே நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 9

உயிர்கட்கு நன்னெறியாய் நிற்பவனே, திருமால் பிரமற்குத் தியானப் பொருளானவனே, நற்பண்புடையோனே, மறிசேர் கையனே, உன்னையன்றி யாரை நினைப்பேன்.

ஏரார் முப்புரமும் மெரியச்சிலை தொட்டவனை
வாரார் கொங்கையுடன் மழ பாடியுள் மேயவனைச்
சீரார் நாவலர்கோன் ஆரூரன் உரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பர லோகத் திருப்பாரே. 10

முப்புரங்களும் அழியுமாறு வில்லை வளைத்தவனே, உமையம்மையோடு மழபாடியுள் உறையும் இறைவனை நம்பியாரூரர் பாடிய பாடல்களைப் பாடவல்லவர் சிவலோகத்தில் இனிது வீற்றிருப்பர்.

---

அயலார் அறியாமல் அறநெறி நின்றவனே நன்கு வாழ்ந்த அறவோன் —ஆலென் ஒயிட்

## வைகாசி மாத அடியவர் வரலாறு

### கழற்சிங்க நாயனார் (24—5—98)

பல்லவ மன்னராகிய கழற்சிங்கரின் மனைவியார் திருவாரூர் திருக்கோயிலில் இறைவனுக்கென வைத்திருந்த மலரினை முகர்ந் ததை சிவ அபாரதமெனச்சுட்டிக்காட்டும். வகையில், செறுத் துணை நாயனாராகிய சிவத் தொண்டர் அம்மையாரின் மூக்கை அரிந்தார். 'தாம் மன்னாரயிருப்பினும், இச்செயலை அன்போடு ஏற்றுக் கொண்டார். கழற் சிங்க நாயனாரின் குருபூசை நாள் வைகாசித் திங்கள் பரணி நன்னாளாகும்.

### நமிநந்தி அடிகள் நாயனார் (30—5—98)

திருவாரூர் அரனெறி திருக்கோயிலில் திருவிளக்குப் பணி செய்து பேறு பெற்றவர் நமிநந்தி அடிகள். சமணரின் நகைப் பைத் தாழ்வுறச் செய்ய நமிநந்தி அடிகள் நீரைவிட்டு விளக் கெரித்ததையும் இறைவன் ஏற்றுள்ளார். அன்னாரின் குருபூஜை நாள், வைகாசித் திங்கள் பூசம் நன்னாள்.

### சோமாசிமாற நாயனார் (31—5—98)

திரு அம்பர் என்னும் தலத்தில் சிவனடியாரைப் போற்றி யும் குறிப்பாக சுந்தர மூர்த்தி நாயனாரைப் போற்றியும் அஞ் செழுத்தை ஓதுவதை நியமமாகக் கொண்டு வாழ்த்தவர் சோமாசி மாறர். அன்னாரின் குருபூசை நாள் வைகாசித் திங்கள் ஆயில் யம் நன்னாளாகும்.

### முருகநாயனார் (11—6—98)

திருப்புகலூரில் மறையவர் குலத்துதித்தவர் முருகநாய னார். வர்த்தமானீச்சரம் என்னும் திருக்கோயிலுக்கு நறுமண மலர்களால் மாலைகள் தொடுத்து திருப்பணி செய்தவர்—ஞான சம்பந்தப்பெருமான்திருப்புகலூருக்கு எழுந்தருளிய போது அவரை வரவேற்று உபசரித்து தொண்டு செய்தவர். ஞானசம்பந்தரின் திருமணத்தன்று எழுந்த சிவசோதியிற்கலந்து முத்திப் பேறு பெற்றார். முருக நாயனாரின் குருபூசை நாள் வைகாசித்திங்கள் மூலம் நன்னாளாகும்.

---

தமது உயர்வை அறியாதவரே சான்றோர்

—கார்லைல்

## திருஞானசம்பந்த நாயனார் (11—6—98)

சீர்காழிப் பதியில் கவுணியர் குலத்தில் சிவபாத இருதய ரின் திருமகனாக அவதரித்தவர் திருஞானசம்பந்தர். சிவபெரு மான் உமாதேவியுடன் எழுந்தருளி சம்பந்தருக்கு மூன்றாவது வயதில் ஞானப்பால் வழங்கியருளினார். இது மட்டுமின்றி. இறை வனது கருணையினால், பொற்றாளம் பெற்றார். பல்லக்கு குடை முதலியவை பெற்றார். தனது தந்தை செய்யவிருந்த யாகத் திற்கு பொற்கிழி பெற்றார். மற்றும் பல்வேறு அற்புதங்கள் நிகழ்த்தினார். கோள்களின் செயல்களினால் துன்புறுவோர் நலம் பெற, குளிர் ஜுரம் நீங்க, வெப்பு நோய் நீங்க, மன அமைதி பெற, மற்றும் பலவற்றிற்கு உரிய பதிகங்கள் இறைவனது திருவருளினால் பாடியுள்ளார். திருக்கோயில்கள் தோறும் சென்று வழிபாடு செய்தும் பாணர் வகுப்பைச் சேர்ந்த திருநீல கண்ட யாழ்ப்பாணரின் யாழிசையைத் தமக்கு உடனாய் வைத்தும் இறைவன் புகழைப் பாடி ஞானசம்பந்தர் தமது பதினாறாவது வயதில் சோதியில் கலந்தார். குருபூசை நாள் வைகாசித் திங்கள் மூலம் நன்னாளாகும்.

## திருநீலநக்க நாயனார் (11—6—98)

நீலநக்கர் சாத்தமங்கலத்தில் மறையவர் வகுப்பில் பிறந் தவர். தனது மனைவியின் செயலை சிவ அபராதமாகக்கருதி னார். இறைவன் இது சிவ அபராதமல்ல அன்பு என ஏற்றுக் கொண்டார். அவரது குருபூசை நாள்வைகாசித்திங்கள் மூலம் நன்னாள்.

## திருநீலகண்டயாழ்ப்பாணர் (11—6—98)

திருஞானசம்பந்தருடன் உடன் சென்று அவரது பாக் களுக்கு யாழ்வாசித்து, இறுதியில், ஞானசம்பந்தரின் திருமணத் தன்று எழுந்த சிவசோதியில் கலந்து திருநீலகண்ட யாழப்பாணர் பேறு பெற்றார். குருபூசை நாள் வைகாசித்திங்கள் மூலம் நன்னாள்.

இந்த நாயன்மார்களின் குருபூஜை நாட்களில் டிதுரை பன்னிரு திருமுறை மன்றத்தினர். அ/மி. மீனாக்ஷிசுந்தரேசுவரர் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் நாயனாருக்கு காலையில் வழிபாடு செய்து மாலையில் திருத்தொண்டர்புராண சிந்தனை மேற்கொள்வர்.

C. S. சொக்கலிங்கம்

---

இவ்வுலகில் தோற்றவன் கண்டதுதான் நாத்திகம்

—மாஜினி

*திருநாவுக்கரசு சுவாமிகள் விழாவில் 22—4—98 அன்று*

தொழிலதிபர் திரு. **N. சண்முகம்** (விசாலாட்சி நூற்பாலை)

ஆற்றிய தொடக்கவுரை.

''இடை அறாப் பேரன்பும் மழைவாரும் இணை விழியும், உழவாரத் தின் படை அறாத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும் நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப்பாடல் தொடையறாச் செவ்வாயும் சிவ வேடப் பொலி வழகும் துதித்து வாழ்வாம்''

பெருமதிப்புக்குரிய சான்றோர்களே! பன்னிரு திரு மன்றத்தைப் பேணித் தமிழும் சைவமும் வளர்க்கும் பெரியோர் களே! இன்று இசையமுதை வழங்க இருக்கும் இசையாசிரியரும் நண்பருமாகிய திருஞானசம்பந்தம் அவர்களே! ஏனைய இசை யன்பர்களே! தாய்மார்களே உங்களையெல்லாம் முதலில் வணங்கி மகிழ்கின்றேன்.

தேசம் உய்யத், திருத்தொண்டத் தொகை, முன்பணித்த திருவாளன், வாச மலர் மென்கழல் வணங்க, வந்த பிறப்பை வணங்குவாம் என்றார் தெய்வச்சேக்கிழார். அதுபோல,

ஒருநாவுக்கு உரைசெய்ய இயலாத பெருமைமிகுந்த, திரு நாவுக்கரசரைப் பற்றிச் சிந்திக்கவும், அவரை வந்திக்கவும் வாய்த் தது இப்பிறவி என மகிழ்கிறேன்.

நான் இந்த மன்றத்திற்குப் புதியவன். நீங்கள் பன்னிரு திருமுறைகளைப் பன்முறை கேட்ட திருச்செவியினர். பதிகச் செஞ்சொல் மேய செவ்வாயினர்.

பத்து உடையீர்! பாங்கு உடையீர்! புத்தடியோம் புன்மை தீர்த்துஆட்கொண்டால் பொல்லாதோ என்னும் மணிவாசகத்தை விண்ணப்பித்துக் கொண்டு, சில சொல்ல முற்படுகிறேன்.

தேவார ஆசிரியர் மூவருள் இயல்இசைத் தமிழாகிய திருப் பதிகங்களை முதன்முதல் அருளிச் செய்தவர் திருஞானசம்பந் தப் பெருமான். எனவே அவர் அருளிய திருப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாக அமைந்தன. சம்பந்தரின் நண்பராய் அக்காலத்தில் விளங்கிய திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங் கள் 4,5,6, ஆம் திருமுறைகள் ஆகின. இவர்களுக்குப் பின் வந்த சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள் 7-ஆம் திருமுறை என்று பொருந்தின. இது பண்முறை அமைப்பாகும். இதுவே பழைய ஏட்டுச் சுவடிகளில் இடம் பெற்றுள்ளது. தலமுறை அமைப்பு பிற்காலத்தில் தோன்றியதே ஆகும்.

---

**சான்றோர் சந்திரனைப் போல் நன்மையே செய்வர்**

**—காலின்ஸ்**

இன்று சித்திரைச் சதயம். அப்பர்சுவாமிகள் குருபூசை. அதில் இசையரங்கு நிகழவுள்ளது. ஆதலால் அப்பர் தேவாரம் கூறுகின்ற இசைச் செய்திகளை மட்டும் சுட்டிக்காட்ட விரும்பு கிறேன். தெய்வத்தைப் போற்றிய இசைப்பாடலை 'வாரம்' என் பார் இளங்கோஅடிகள். தேவாரம்பாடியதிருநாவுக்கரசர், இயற்ற மிழிலும் இசைத் தமிழிலும் வல்லவர். இறைவனது பொருள் சேர் புகழை நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து இசைத் தமிழ்ப்பாடல்களால் பரவினார்.

''தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்''
''அடியேன் தன்னைப், பன்னாள், பாமாலை பாடப் பயில் வித்தானை''

தமிழ்மாலை பாடுவித்து என் சிந்தை மயக்கறுத்த திரு அருளினானை எனவரும் வாகீசர் வாக்குகள் இக்கருத்தைப் பறை சாற்றுகின்றன.

திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்களில் பண் அமைந்த பதிகங்கள் 4ஆம் திருமுறை, திருக்குறுந் தொகைப்பதிகங்கள் 5—ஆம் திருமுறை, திருத்தாண்டகப்பதிகங்கள் 6ஆம் திருமுறை என வகைப்படுத்தப்பட்டுள்ளன,

கூற்றாயினவாறு விலக்ககிலீர் எனத்தொடங்கும் பதிகமே திருநாவுக்கரசர் அருளிய முதற்பதிகம் ஆகும்.

எனவே, இது நான்காம் திருமுறையில் முதலில் அமைக்கப் பெற்றது. இதற்கு உரிய பண், கொல்லி என்பதாகும். கருநாடக இசை வழியில் 'நவரோசு' என்னும் இராகத்தில் இதைப் பாடு வதை நாம் காண்கிறோம். வியப்பு, அவலச்சுவைகளுக்கு உரி யது இந்த ராகம்.

தலையே நீ வணங்காய் எனத்தொடங்கும் திரு அங்க மாலை சாதாரிப் பண்ணுக்கு உரியதாகும். இன்று பந்துவராளி என்கிறோம். அச்சம், பெருமிதம், உவகைச் சுவைகளைப் புலப் படுத்தும் இராகம் இது.

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே என வரும், பதிகம் பழந்தக்கராகத்திற்கு உரியது. வியப்பு, அவலச் சுவைகளுக்குத்தகுந்த இந்தப்பண்ணுக்கு இன்றையபெயர் சுத்த சாவேரி என்பது.

நேரம் கருதிச் சுருக்கமாகச் சிந்திப்போம். இசைக்கருவி கள் பற்றிய செய்திகளும் அப்பர் தேவாரத்தில் நிறைந்துள்ளன.

தாளங்கள் கொண்டும் குழல் கொண்டும் யாழ் கொண்டும் எனவும்.

---

துன்பத்தைப் பொறுப்பது விதியை வெல்வதாகும்
—காம்பெல்

குழலோடு கொக்கரை கைத்தாளம் மொந்தை குறட்பூதம் முன்பாடத், தான் ஆடுமே எனவும் கூறுவார் தாண்டகவேந்தர்

பண்ணொடு யாழ்வீணை பயின்றாய் போற்றி, ஏழிசை யாழ் வீணை முரலக்கண்டேன் எனவரும் அடிகள், யாழும் வீணையும் வேறு வேறு என்பதற்கு அப்பரடிகள் தரும் சான்றாகும்.

இசை நிகழ்ச்சிகளில் பேசிக்கொண்டே இருத்தல் தவறு என்பதை அறிவேன். உங்களோடு சேர்ந்து இசை பருகநானும் ஆவலாக உள்ளேன்.

எனவே, எனது தொடக்க உரையை இத்துடன் நிறைவு செய்து.

என்னையும் ஒருவன் ஆக்கி இருங்கழல்

சென்னியில் வைத்த சேவக போற்றி என்னும் திருவாசகத் தொடரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்கு எனது நன்றி வெளிப்பாடாகத் தெரிவிக்கிறேன். நன்றி வணக்கம்.

**''திருமுறைகளில் சமுதாய நோக்கு''**

கட்டுரை அடுத்த இதழில் இடம் பெறும். — ஆசிரியர்

ஆயிர வைசிய குலமாமணி, முத்தமிழ் மணி, தண்டமிழா சான், விரிவுரை ஞாயிறு, சிவநெறிச் செம்மல், குறள் நெறிச் செல்வர், அருள்மொழி அரசு, நல்லாசிரியர், ஐயாறனடிமை புலவர் **கோ. சுப்பிரமணியனார்** 'உழவாரம்' வளர்ச்சிநிதிக்கு ரூ. **1001/-** வழங்கிப் புரவலரானார்.

UZHAVARAM (Monthly) Regd No. TN / MA ‹ › 16/98
Licenced to Post Without PrePayment Under Licence No. 11/98
Posted at Madurai Bazaar Post Office on 16-5-98

உ
சிவமயம்
'என் கடன் பணிசெய்து கிடப்பதே'

**உழவாரம்**

ஆசிரியர் : கூடல்சுந்தரன்
துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com. B.A.
மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக
வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்
முகவரி : D. 89 பாரதியார் தெரு, டோர் நிர் 12, திருநகர், மதுரை – 6.
O ☎ 883086
அச்சு : அபிராமி அச்சகம், B-40 திருநகர், மதுரை–6. ☎ 883085

பெறுநர்
திரு N. திருநாவுக்கரசு B.O.C
7/2 சர்ச் புவது தெரு,
T.T. நகர்
அப்பர் அருகம்,
காரைக்குடி
630002

புரவலர் கட்டணம் ரூ 1000/-
ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா - ரூ. 25/-



